# ஸ்ரீராமாநுஜன்-381



ஆசிரியர்

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

தொகுதி 33 | ரௌத்ரி ஸ்ரீ சித்திரைமீ 1980 ஏப்ரல் | பகுதி 1


## பத்ராதிபவிஜ்ஞாபனம்

(அடியேன் P. B. A தாஸன் செய்யும் விண்ணப்பம்)

நமது ஸ்ரீராமாநுஜனுக்கு முப்பத்திரண்டு பிராயப் பூர்த்தியைப் பற்றி முன்னிதழில் விண்ணப்பம் செய்தாயிற்று. முப்பத்து மூன்றும் பிராயப் பிறப்பைப்பற்றி விசேஷித்து விஜ்ஞாபிக்க வேண்டியது என்ன இருக்கிறது? பத்ரிகையை நெடுநாளாக ஆதரித்து வரும் பெரியார்களின் அன்பும் ஆதரவும் தொடர்ந்து மேன்மேலும் ஓங்கி வளரவேணுமென்கிற பிரார்த்தனையை அடுத்தடுத்துச் செய்கின்றேன் ஸமீப காலத்தில் அடியேனுடைய தொண்ணூறுவது பிராயப் பிறப்பு ஸம்பந்தமான கோஷ்டி மிகவும் விசேஷமாக நடைபெற்றிருக்கின்றது. சென்ற இதழில் வெளியிட்டிருந்தபடியே உபயவேத பாராயண ஸ்தோத்ர பாட கோஷ்டிகளும் வித்வான்களின் உபந்யாஸங்களும் மிகமிகச் சிறப்பாகவே நடைபெற்றன. ஸந்நிஹித தேசஸ்தர்களும் தூரதேசஸ்தர்களுமான மஹான்கள் விசேஷமாக ஸேவை ஸாதித்தருளினது பரம பாக்கியம். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி சின்ன



கேள்வி ஜீயர் ஸ்வாமியும் ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீயதிராஜ ஜீயர் ஸ்வாமி யுமெழுந்தருளியிருந்து கோஷ்டியை அலங்கரித்தது பெரிய விசேஷம். பத்து நாளைய நிகழ்ச்சிகளையும் பரக்க விஜ்ஞாபிக்க வேணுமென்கிற குதூஹலம் மிகவுமுண்டடியேனுக்கு. அடியேனுடைய ஆப்தர்களில் தலைவரும் ஜகத் ப்ரஸித்தருமான ஸ்ரீமதுபயவே. (க்வாளியர்) ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி நாலைந்து நாள் இவ்விட மெழுந்தருளியிருந்து கோஷ்டியை அலங்கரித்தார். அந்த மஹா ஸ்வாமி இங்கிருந்து புறப்பட்டெழுந்தருளின மறுநாளே சென்னை யிலிருந்து ஒரு விரிவான கட்டுரையை எழுதியனுப்பி 'இதை ஸ்ரீராமாநுஜனில் அவசியம் வெளியிடவேணும்' என்று நியமித்தருளி யிருந்தார். அதை முழுதும் வாசித்துப் பார்த்ததில், அந்த ஸ்வாமி பல்லாண்டுகளாக அடியேன் மீது வைத்திருக்கும் பரமப்ரேம ப்ரவாஹத் திற்குப் பரீவாஹமாக அக்கட்டுரை அமைந்திருந்ததனால் அதிச யோக்திகள் அதிகமாகக் காணப்பட்டன. "ஆதித்யராமதிவாகர அச்யுதபாநுக்களுக்கும் வகுளபூஷண பாஸ்கரனுக்கும் ராமாநுஜ திவாகரனுக்கும் மேற்பட" இத்யாதிகளான அத்யுக்திகள் மலிந் திருந்தன. அக்கட்டுரையைப் பத்திரிகையில் அச்சிட்டு வெளியிட்டால், 'இவனே யெழுதி அவர் பெயரால் வெளியிட்டுக்கொண்டான்' என்றே உலகம் நினைக்கும்.

ஸாமான்யமாக உலகத்தில் புகழ்ச்சியினால் மகிழ்ச்சியடையாதார் இருக்க மாட்டார்களென்றே சொல்லலாம். (ஆசார்யஹ்ருதயத்தில் ஸாதித்தபடி க்க்யாதிலாப பூஜா பேக்ஷையற்றவர்களை இக்காலத்தில் தேடிப்பிடிக்க வேண்டியேயிருக்கும். ப்ரஸ்துதரான ஸத்யமூர்த்தி ஸ்வாமி தமது கட்டுரை அவசியம் அச்சாகி வெளிவர வேணுமென்று கொண்ட குதூஹலத்தை அடியேன் நிறைவேற்றாத குற்றத்தை அந்த ஸ்வாமி க்ஷமித்தருளவேணும்.

வடமொழி வியாகரணத்தில் ⌘ ஆசம்ஸாயாம் பூதவச்ச ⌘ என்றொரு ஸூத்ரமுண்டு; தமிழர் காலவழுவமைதி யென்பர்கள் விளையப் போவதை விளைந்து விட்டதாகவே சொல்லுவதொரு முறை யுண்டே. அந்த ஸ்வாமி அடியேனிடமிருப்பனவாக எழுதியுள்ள. அதிசயங்களெல்லாம் அந்த ஸ்வாமி போல்வாருடைய மங்களாசாஸன பலத்தினால் குறையற அமைய வேண்டுமென்பதே அடியேனுடைய ஆசம்ஸை. ⌘ பாரோர் புகழ ⌘ என்று சூடிக் கொடுத்த சுடர்க்கொடியும் ⌘ வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே ⌘ என்று நம்மாழ்வாரும் அருளியபடி புகழ்வாய்க்கப்பெறில் அது பெரும் பேறேயாகும். தற்காலம் அடியேனுடைய நிலை நேத்ரச்ரோத்ரங்களின் பாடவம் க்ஷணே க்ஷணே குன்றி வருகிறது. அசக்தியின் எல்லை நிலம், ஆனாலும், நாற்றிசை யிலிருந்தும், ஏன்? எண்டிசையிலிருந்தும் தினப்படியாகப் பெரியார்களும் நண்பர்களும் அன்பர்களும் அனுப்பிவரும் மங்களாசாஸன பத்திரிகை களையே ஜீவாதுவாக நினைத்து வாழ்கின்றேன்.

"தழை நல்லவின்பந்தலைப் பெய்து எங்குந்தழைக்கவே"

பத்ராதிப ஸ்வாமியின் 90 வது திருநக்ஷத்ர பூர்த்தி மஹோத்ஸவ சாற்று முறையன்று சென்னை உயர் நீதிமன்றத்தின் தலைமைநீதிபதி மாண்புமிகு டாக்டர் மு. மு இஸ்மாயில் அவர்களின் விஜயம்.





டாக்டர் இஸ்மாயில் அவர்களின் விஜயம்

## பரமபத ப்ராப்தி

பகவத் பாகவதாசார்ய கைங்கர்ய துரந்தரராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமான் உ. வே. புரிசை திருமலை அனந்தாண் பிள்ளை ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி ஸமீபத்தில் திருநாடலங்கரித்தார். அவருடைய அத்விதீய புத்ரரத்னம் அவரைப் போன்றே ஆத்ம குண பூர்த்தியுடையராய் விளங்கி வருகிறார். பொலிக! பொலிக!!

---

சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கும் ஸ்ரீமதுபயவே. P. B. அனந்தாசாரியர் ஸ்வாமிகளின் தேவிகள் அம்ருதவல்லியம்மாள் சென்ற மாதத்தில் ஆசாரியன்திருவடி யடைந்த செய்தி பரிதபிக்கத் தக்கது. எம்பெருமான் திருவுள்ளம்.

பத்திராதிபர்

## ஸம்ப்ரோக்ஷணம்

ஸ்ரீமன் நாதமுனிகள் மற்றும் ஆளவந்தார் ஆகியோருடைய அவதார ஸ்தலமான காட்டு மன்னார் கோயிலில் நாதமுனிகள், ஆளவந்தாருக்கு அஷ்டபந்தன மஹா ஸம்ப்ரோக்ஷணம் ரௌத்திரி ஹு வைகாசி மீ 29 (11—6—80) புதன் மாலை தொடங்கி ஆனி மீ 1உ (15—6—80) ஞாயிறு காலை 5-15—6-00 மணியளவில் இரு மறையின் ஒலி திகழ நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். இவ்வரிய கைங்கரியத்துக்கு நன்கொடை நல்கியும் நேரில் கலந்து கொண்டும் நல்லோர்கள் நலமெய்தலாம். நன்கொடை யனுப்ப விலாசம்.

நிர்வாக அதிகாரி,
ஸ்ரீ வீரநாராயணப் பெருமாள் ஸ்ரீமந் நாதமுனிகள்,
ஸ்ரீ ஆளவந்தார் ஆலயம், காட்டுமன்னார்குடி (P.O),
காட்டுமன்னார்குடி வட்டம்.

# கேள்விகளின் கருத்து

எம்பெருமானைப் பலவகையாக அனுபவித்துக் கொண்டு போருகின்ற ஆழ்வார்கள் இடையிடையே எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கக் காண்கிறோம். அவை எம்பெருமானிடமிருந்து விடைகிடைக்கப் போகிற தென்கிற நம்பிக்கையினால் செய்த வினாக்களாகத் தோன்றவில்லை. மஹான்கள் நிஷ்ப்ரயோஜனமாகக் கேள்வி கேட்க மாட்டார்கள், கேட்கிற கேள்விகளிலிருந்து ஒரு விலக்ஷணமான அர்த்தம் வெளிவந்து தீரவேணும். ஓரிடத்திலுள்ள வினாவை இங்கெடுத்துக் காட்டி இன்பம் நுகர விரும்புகின்றோம்.

சோழ நாட்டில் சிறுபுலியூரென்பது ஒரு திவ்ய தேசம். அங்கு சலசயனப் பெருமாள் ஸேவை ஸாதித்தருளா நின்றார். பெரிய திருமொழியில் 7.9.)* கள்ளம்மனம் விள்ளும் வகை* என்று தொடங்குந் திருமொழி இத்தலத்தை மங்களாசாஸனம் செய்யும் பதிகம். இதில் ஏழாவது பாசுரம்—

"சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலைமலையுறையுமாயா! எனக்குரையாயிது மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைமறையோர் சிறு புலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ வறியேனே."

என்பது. இதன் பொருளாவது:— மிகவுயர்ந்து குளிர்ந்த திருமாலிருஞ் சோலை மலையிலே நித்யவாஸஞ் செய்கின்ற மாயனே! நீ நால்வேதங்களி னுள்ளே யிருக்கின்றாயோ? ஹோமத் தீயை வளர்க்கின்ற கையை யுடையரான வைதிகர்கள் வாழ்கிற சிறு புலியூரில் சலசயனக் கோயிலிலுள்ளாயோ? உனது அன்பர்களின் நெஞ்சிலுள்ளாயோ? அறிகின்றிலேன். எனக்கு இதைத் தெரிய வருளிச் செய்யவேணும் —என்பதாம். திருமாலே! நீ வேதங்களிலிருக்கின்றாயா? சிறு புலியூர்ச் சலசயனக் கோயிலில் இருக்கின்றாயா? அன்பர்தம் உள்ளத்திலிருக் கின்றாயா? இன்னவிடத்திலிருக்கின்றா யென்று தெரியவில்லை; அடியேனுக்கு உண்மை தெரியும் படி யருளிச்செய்ய வேணு மென்று கேட்கிற விதற்கு என்ன திருவுள்ளமென்று ஆராயவேணடும்.

சிறுபுலியூர் விஷயமாக அருளிச் செய்யப்படுகிற இத் திருமொழியில் இத் தலத் தெம்பெருமானை விளிக்க வேண்டியிருக்க, 'திருமாலிருஞ் சோலை மலை யுறையும் மாயா!' என்று அழகரை விளித்தது எதற்காக வென்று முன்னம் ஆராயவேண்டும். எம்பெருமாள் எங்கும் நிறைந்த பெருமானென்பதை அல்பஜ்ஞர்களான நாமே தெரிந்து கொண்டி ருக்கும் போது ஸர்வஜ்ஞரான ஆழ்வார் தெரிந்து கொள்ளாமலிருக்க ப்ரஸக்தியில்லை. எம்பெருமான் தானே நால்வேதங்களிலும் திவ்ய

தேசங்களிலும் அன்பர்களின் உள்ளத்திலும் மற்றும் பலபல விடங்களிலும் எழுந்தருளியிருப்பது அஸம்பாவிதமன்றே. இவ் வர்த்தத்தை இவ்வாழ்வாரும் மற்றுள்ள வாழ்வார்களும் தம் தம் திவ்ய ஸூக்திகளில் பல விடங்களில் காட்டியு மிருக்கிறார்களே. அப்படியிருக்க, இங்ஙனே கேள்வி கேட்க வேண்டிய ப்ரஸக்தி என்ன? என்று விமர்சிக்க வேண்டும்.

உண்மையில் இது வினாவன்று; ஆச்சரியமான அநுபவ ப்ரணாளிகளில் இது வொரு விலக்ஷணமான வகை. சிறுபுலியூர்ப் பெருமானே! என்று விளிக்கவேண்டி யிருக்க 'திருமாலிருஞ்சோலைமலையுறையும் மாயா என விளித்தது–சிறு புலியூரிலுறையும் பெருமானும் திருமலையிலுறையும் பெருமானும் ஒருவரே யென்கிற உண்மையைக் காட்டுதற்கேயாம். இதை வடநூலார் 'தர்மி ஐக்யம்' என்பர்கள். ஸ்தானத்தில் பேதமே யொழிய தர்மியில் [எம்பெருமானில்] பேதமில்லை யென்கிற பரமார்த்தம் இத்தகைய விளியினால் விளங்கும். 'திருமாலிருஞ்சோலைமலையுறையும் மாயா?" நீ சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ?" என்று கேட்டிருக்கிறவிது "சிறுபுலியூர்ச் சலசயனத்துறையுமாயா! நீ திருமாலிருஞ் சோலைமலையிலுள்ளாயோ?" என்கிற கேள்வியிற் காட்டிலும் வேறுபட்டதன்று என்று திண்ணமாக வெண்ணுக.

எங்குமுள்ள பெருமானை 'அங்கிருக்கிறாயா? இங்கிருக்கிறாயா?' என்று விகற்பித்துக் கேட்டிருப்பதானது 'எவ்விடத்திருப்பதில் உனக்கு உகப்பு அதிகம்?' என்று கேட்பதாகக் கொள்ளவும். இக் கேள்வி போலவே கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில்பேரருளாளப்பெருமாளை நோக்கி—பக்தாநாம் யத்வபுஷி தஹரம்* என்கிற ச்லோகத்தில் கேள்வி கேட்கிறார். பக்தர்களின் தஹரம் புண்டரீகம், ஆஸன பத்மம், வேதாந்தம், நம்மாழ்வாருடைய திருமுடி, ஹஸ்திகிரியின் சிகரம் ஆகிய இந்த ஸ்தான விசேஷங்களுக்குள், "தே பாதாப்ஜயோ: கிம்அதி ஹ்ருதம்?' உன்னுடைய திருவடித் தாமரைகளுக்கு மிகவும் ஸுகாவஹமான இடம் எது? என்று வினவியிருக்கின்றார். அத்தகைய வினாவே இங்கும் விவக்ஷிதம் என்னலாம்.

இப்பாசுரத்தில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி வருமாறு— "இத்தால் சொல்லிற்றாய்த்து–ஸௌபரி பல வடிவு கொண்டாப்போலே இவ்வோ விடங்கள் தோறும் இனி அவ்வருகில்லை யென்னும்படி குறையற வர்த்திக்கிறபடியைக் காட்டிக் கொடுத்தான்' என்று. (ஸௌபரியின் சரித்திரம் அடுத்த வியாஸத்திலே விவரிக்கப் படுகிறது; அங்கே கண்டு கொள்க.) எம்பெருமான் ஒவ்வோரிடத்திலும் வர்த்திக்கிறபோது 'இவ்விடத்தில் மாத்திரமே யுள்ளான்' என்று தோற்றும்படி வர்த்திப்பவன். நம் போல்வார், எம்பெருமான் ஓரிடத்திலிருக்கும்படியைக் காணும் போது மற்றோரிடத்திலிருக்கும் படியைக் காண முடியாது. நம்முடைய கண்ணுக்கு எவ்வளவு காணக் கூடிய சக்தியோ அவ்வளவு காண்போமே யல்லது அதீந்திரியமான

விஷயங்களை ஸர்வாத்மநா காணகில்லோம். ஆழ்வார் மயர்வற மதிநல மருளப் பெற்றவராகையாலே, திருமாலிருஞ்சோலையிலிருப்பையும் நால் வேதங்களிலிருப்பையும் சிறுபுலியூரிலிருப்பையும் பக்தர்களின் ஹ்ருதய கமலத்திலிருப்பையும் ஏககாலத்தில் காணப்பெற்றார். இது தாமாகக் காணப்பெற்றதன்று; அவன் தானே தன்னுடைய நிர்ஹேதுகக்ருபை யினாலே காட்டிக்கொடுக்கக் காண பெற்றது. அதனாலுண்டான ஆனந்தம் உள்ளடங்காமல் இப்படிப்பட்ட வினாவை யுட்கொண்ட பாசுரமாகப் புற வெள்ள மிட்டதாயிற்று. பிரானே! நீ பலபல விடங்களில் உகந்து எழுந்தருளி யிருக்கு மாற்றை அடியேனுக்கு ஏககாலத்திலே ஸேவை ஸாதிப்பித்த விது என்ன கருணைத் திறம்! என்றுவியந்து கூறுவதுதான் இக் கேள்வியின் கருத்து.

## ஸௌபரி சரிதச் சுருக்கம்.

ஸௌபரியென்னுமொரு மாமுனிவன் நீர் நிலையிலிருந்துகொண்டு பன்னிரண்டாண்டு தவம் புரியா நின்ற வளவில் அங்கு ஸம்மதனென்கிற மத்ஸ்யாதிபதி தன்னுடைய ப்ரபலகுடும்பங்களோடு கூடிக் களித்து விளையாடா நின்றபடியைக் கண்ணுற்றானொருநாள். கண்ணுற்றதும் 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடநின்று சிற்றின்பம் நுகர்ந்து களித்தாலென்ன?' என்று தோன்றிற்று. குடும்பவாழ்க்கையில் பேராவலுண்டாயிற்று. விவாஹம் செய்துகொள்ளவேணுமென்னுமவாவினால் உடனே நீர் நிலையை விட்டுக் கிளம்பிப் பெண் விசாரிக்கப் புறப்பட்டான். அப்போது மாந்தாதாவென்னு மரசனுக்குப் பல பெண்களிருப்பதாகக் கேள்விப்பட்டு அவனிடஞ்சென்று உன்னுடைய ஐம்பது பெண்களுள் ஒருத்தியை எனக்குக் கன்னிகாதானம் செய்யவேணுமென்று வேண்டினான். அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையும் கண்டு பெண் கொடுக்க இசைந்திலன். 'இவர் மஹர்ஷி' யென்று மறிந்தவனாகையாலே பெண் கொடுக்க முடியாதென்றால் நம்மைச் சபித்து விடுவரே யென்கிற அச்சமுமுண்டாகப்பெற்று சிந்தைக் கடலில் ஆழ்ந்திருந்தனன். அன்னவனை நோக்கி முனிவர் 'அரசனே! சிந்திப்பது எதற்காக? பெண்ணைப் பிறந்தவளை எப்படியும் ஒருவனுக்கு விவாஹம் பண்ணிக் கொடுத்தாக வேண்டும்; விரும்பிக்கேட்கிற எனக்குக் கொடுப்பதில் என்ன விசாரம்?' என்றார். அதற்கு அரசன் 'எனக்கொன்று மாக்ஷேபமில்லை. பெண் தானாக விரும்பி வரிக்கும் வரனுக்குக் கன்னிகா தானம் செய்வது எங்கள் குலாசாரம்' என்றனன். அப்படியாகில் பெண் களிருக்குமிடத்திற்கு என்னைப் போகவிடலாமேயென்றார்முனிவர். அதற்கு இசைந்த அரசன் உடனே அந்தபுரக்காவலனை ஷண்டனை வரவழைத்து அவனோடு கூட முனிவரைக் கந்யாமண்டபத்திற்குப் போக விட்டான். முனிவர் புறப்படும்போதே தமது தவவலிமையினால் லோகோத்தரமான ஸௌந்தர்ிம் வாய்ந்த மேனியைப் பரிக்ரஹித்துக் கொண்டு கன்னிகை களின் முன்னே சென்று நின்றார். நின்றதும் அங்கிருந்த ஐம்பது பெண் களும் நான்தானிவரை மணந்துகொள்வேன். நான்தானிவரை மணந்து

கொள்வேனென்று போட்டி போட்டுக்கொண்டு மேல் விழுந்தவாறே இதைக் காவலாளன் அரசனிடம் சென்று அறிவித்தனன். அரசன் அது கேட்டு இதென்ன ஆச்சரியம்! இதென்ன அற்புதம்? என்று மிகவும் வியந்து ஐம்பது பெண்களையும் அம்முனிவர்க்கே விவாஹம் பண்ணிக் கொடுத்தனன். முனிவரும் விவாஹம் செய்து கொண்டு ஐம்பது மனைவி யரையும் தமது ஆச்ரமத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், சில்பகலா நிபுணனான விச்வகர்மாவை வரவழைத்து வாபீகூப உத்யாநாதி ஸகலாதி சய ஸம்பந்நங்களான ஐம்பது மாடமாளிகைகளை நிர்மாணம் செய்வித்து ஒவ்வொரு மாளிகையில் ஒவ்வொருத்தி மிக வின்பம் மன்னி வாழும்படி செய்வித்தார். தாமும் ஐம்பது வடிவுகளைப் பரிக்ரஹித்து அவர்களி டத்தில் ரமித்துக் கொண்டிருக்கின்றார்.

இப்படி காலம் செல்லுகையில் ஒருநாள் மாந்தாதாவெனு மவ் வரசன் பெண்களை க்ஷேமம் விசாரிக்கப் புறப்பட்டு வந்து முதல் மாளிகை யிற்புகுந்து அங்கு வாழும் பெண்ணைக் குசலப்ரச்நம் செய்தனன், அவள் தான் ஆச்சரியமான இன்பங்களை யநுபவித்து வருவதாகச் சொல்லித் தன்னுடைய பரமஸந்தோஷத்தைக் கூறி, ஆனால் ஒரு துக்கமிருப்பதாக வுரைத்தாள்—'உம்முடைய மருமகப்பிள்ளையான முனிவர் எப்போதும் இந்த மாளிகையிலேயேகிடக்கிறார்; இவ்விடம் விட்டுப் பெயர்வதே யில்லை. இதற்காக எனது ஸஹோதரிகள் துக்கித்திருப்பார்களே என்ப தொன்றே எனக்கு துக்கம்' என்றாள்.

அடைவே ஒவ்வொரு மகளையும் க்ஷேமம் விசாரிக்கப் போனவிடத் தில் ஒவ்வொருத்தியும் இவ்வண்ணமாகவே சொல்லக் கேட்ட அரசன் முனிவருடைய ப்ரபாவாதிசயமிது வென்றறிந்து. ஏகாந்தமாக வீற்றிருக் கின்ற அம் முனிவர் பக்கலிலே சென்று பூஜித்துத் தன்னுடைய பரமானந் தத்தைத் தெரிவித்து "மஹாநுபாவரே! உம்முடைய மஹத்தான தபஸ்ஸாஸித்தியடைந்தவிதம் வாசாமகோசரமாயிருக்கின்றதே! இப்படி பட்ட ப்ரடாவத்தை நான் வேறு எந்த மஹர்ஷியிடத்தும் கண்டிலேன்! உம்முடைய தபஸ்ஸித்திப்ரபாவம் லோகவிலக்ஷணமாயிரா நின்ற தந்தோ!" என்று புகழ்ந்து கூறிச் சில நாள் அங்கே தங்கியிருந்து ஸ்வஸ்தானம் மீண்டனன்.

ஸௌபரி முனிவருக்கு நாளடைவில் நூற்றைம்பது மக்கள் பிறந்தனர். மேன்மேலும் அவர்க்குக் குடும்பவாழ்க்கையில் ஆசா பாசம் அளவு கடந்து பெருகிக் கொண்டே சென்றது. ஆசைகள் எவ்வளவு நிறைவேறினாலும் மேன்மேலும் புதிது புதிதான ஆசைப் பெருக்குகள் தோன்றிக் கொண்டே யிருக்கின்றனவேயன்றி ஆசையொழி வது ஈஷத்துமில்லையே யென்று மிகவும் அனுதபித்துக் காடுசென்று சேர்ந்து பரமபுருஷனிடத்திலே மனம்லயித்து முக்தி பெற்றார்.

[ஸ்ரீவிஷ்ணுபுராணம் நான்காவது அம்சம் இரண்டாமத்யாயத்தில் ஸௌபரிசரிதம் விரிவாகக் காணத்தக்கது.]

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

**தமது தொண்ணூறாவது பிராயப் பிறப்பன்று**

(4–4–1980) வெளியிட்ட

வடமொழியில் பாதியும் தென்மொழியில் பாதியுமான

# நவதிவாக்யமய நவரத்னமாலையில்

## தமிழ்ப் பகுதி

1. நம்மாழ்வார் திருவாய்மொழிதொடங்கும்போது ''உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே'' என்கிற பாசுரத்தினால் 'தாம் போதிக்கும் பரமபுருஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைதஸம்பிரதாயம் பரமவைதிகமென்னத் தட்டில்லை. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில் சீர்மைபெற்று விளங்குவன.

2. ''ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி, தாழ்வாதுமில் குரவர்தாம்வாழி – ஏழ்பாரு முய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி, செய்யமறை தன்னுடனே சேர்ந்து'' என்னுமுபதேசரத்தினமாலைப் பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப் பட்டார்கள். ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான

நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார் எம்பெருமானார்போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர்கள். ஸகல சேதநாசேதந சரீரகனாய் ஸமஸ்த கல்யாண குணைகமகனான ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், ×நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களென்றும் விளங்குகின்றது. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேயவைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாம்

3. பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களை அறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். ×ப்ரத்யக்ஷேணநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா× என்கிற புராதந ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம்.

4. வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர்.

5. குத்ருஷ்டிகளானாலும் வேதத்தை ப்ரமாணமாக இசையுமவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களன்றோவென்று சிலர் நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒருவாசியில்லையென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான்' (ஸ்ரீவைகுண்டஸ்தவே)— ×பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந், ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வ நிஹதஸ்ய ச கோ விசேஷ:?× என்கிற சுலோகம் இங்குக் காணத்தக்கது.

6. வேதபாஹ்யர்களும் வேத குத்ருஷ்டிகளும் துல்யயோகக்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டுகிறாரிதில்,

விடாய் மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப் பட்டன; அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்திற் புகாதே கானலேக் கண்டு பாநீய ப்ரவாஹமாக மயங்கி யோடிக்கொண்டே யிருக்கையில் வழியில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படி யாக, மற்ருெரு மிருகமானது விடாய் தீரப்பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சேர்ந்தும் துறைதப்பி யிழியவே அங்குக் கிடந்த முதலேயினுலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசம் இரண்டுக்கும் துல்யமே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீ காரங்களாலே சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்தில் வாசியற்றவர் களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக் கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ர்த்னங் களேக் கொள்ளேகொண்டு அநுபவித்து ஆனந்திக்கக் கடவோம். இவ் வானந்தத்திற்கு நாம் இட்டுப் பிறந்தவர்களாதலால் நாம் பரமபாக்ய சாலிகளாவோம். இது நமக்கே உரிய ஆனந்தம்.

8. வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களேயே ப்ரஹ்ம காண்ட மென்பது. பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முத லிய கருமவிசேஷங்களே விரிவாகக் கூறும் வேதபாகம் கர்மகாண்ட மென்றும், அக்கருமங்களினுல் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களே விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் சொல்லிற்ருயிற்று.

9. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். ('உப- நிஷீததி) என்கிற வ்யுத்பத்திகொண்டது உபநிஷத்தென்கிற பதம். பக வானுடைய அருகேயுள்ளதென்கை. ×வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:× என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானே ப்ரதி பாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும்; உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

10. கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளேப் பரிஹரிப்பதற் காக ஜைமிநியென்னும் மஹர்ஷியெழுந்து பதினுறு அத்யாயங்களோடு

கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸை யென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவையென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவையென்றும் ஒரு பக்ஷமுண்டு. இதைப் பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. *வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யு பரசிததயா ஷோடசாத்யாய்யுபாத்தா* இத்யாதியான அதிகரணஸாரா வளிச்லோகம் காண்க. ''ஜைமிநீயம் ஷோடசலக்ஷணம்'' என்பது பொது வான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினறு அத்யாயங் களும் ஜைமிநிப்ரோக்தமென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.)

11. ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்டவொரு சாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே சாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸையென்றும் வழங்கு வர். ப்ரஹ்மஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினறு பாதங்கள் கொண்டது சாரீ ரகமீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப்பற்றி சர்ச்சைசெய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட் டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ர மிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்றுநாற்பத்தைந்து என்று கணக் கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினறு பாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற் பத்தைந்து ஸூத்ரங்களையுங்கொண்டது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமென்ற தாயிற்று.

12. *[சாரீரகமீமாம்ஸா பாஷ்யங்கள் தோன்றியது.]* தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்து கொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யய மற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமே யாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்

தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்து கொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம் போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம் போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணைகொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை.

13. இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத்ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமியெம்பெருமானர் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார். வட இந்தியாவில் அதிக ப்ரஸித்தி பெற்றுள்ள வல்லப மதம், நிம்பார்க்க மதம், முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது.

14. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் **மதத்ரய பாஷ்ய**மென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத்ராமாநுஜதர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். சங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்ட பாஷ்யம் என்பவைபோலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி இதன் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும்.

15. *[ஸ்ரீபாஷ்யத்தின் பெருமைவிளக்கம்]* உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிருபிக்கப்பட்ட பாஷியம் ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க, ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும்போதே ''பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே'' என்று—(முன்

ஞோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்கியானிப்பதாக) அருளிச் செய்
திருப்பதனுல் (ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்க முடியாது
விளங்குகின்றது.

16. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த
பங்க்தியின்மேல் வீணுன விவாதத்தைக் கிளப்பி நாசமடைந்து போனர்
களென்பது அடியேனுடைய சதபூஷணீ வஜ்ரகுடார—தத்விஜயத்வஜ—
சாங்கரசிரோபூஷா—தத்விபூஷணுதிக்ரந்தங்களினுல் விசதமாகுமாதலால்
அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்க்யாநகவசித
மாயும் அதிப்ராசீநமாயும் பரம பவித்திரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைத
மேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும்
ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.

17. [விசிஷ்டாத்வைத சப்தார்த்தவிவரணம்] விசிஷ்டாத்வைத
ஸித்தாந்தமென்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. ஸித்
தாந்தமென்பதற்கு ப்ராமாணிகமாகப் பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தமென்று
தேர்ந்த பொருள்; மதம் என்றவாறு. இரண்டாயிருக்கும் தன்மை
(த்விதா) எனப்படும்; த்வைத மென்ருலும் அதுவே பொருள். பேதம்
என்றதாயிற்று. அத்தோடு நஞ் சேர்ந்தால் அத்வைதம் என்ருகிறது.
அபேதமென்று பொருள். விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம்.
ஸமஸ்தசேதநாசேதந வஸ்துக்களோடு கூடின ப்ரஹ்மம் ஒன்று—என்று
அங்கீகரிக்கப்படுவதால் இந்த தரிசனம் விசிஷ்டாத்வைத மெனப்படு
கிறது. சித்தும் அசித்துமாகிய இரண்டு தத்துவங்கள் உண்மையில்
கிடையவேகிடையா தென்றும் ப்ரஹ்மமொன்றே உள்ளதென்றும்
கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, மூன்று தத்துவங்களும்
உண்மையாகவுள்ளனவென்று கொள்ளுவதே இந்த தரிசனத்தில் ஸாரம்.

18. [விசிஷ்டாத்வைதமென்பதற்கு வேறு விதமான பொருளின்
பொருந்தாமை] 'விசிஷ்டஷ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம் என்று
கொள்ளுகையன்றிக்கே, 'விசிஷ்டம் ச விசிஷ்டம் ச விசிஷ்டே; விசிஷ்
டயோ: அத்வைதம்—விசிஷ்டாத்வைதம் என்று கொண்டு ஸூக்ஷ்ம
சிதசித் விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கும் ஸ்தூல சிதசித் விசி ட ப்ரஹ்மத்
திற்கும் ஐக்கியம் கொள்ளுகை விசிஷ்டாத்வைதம் என்பாருமுளர்
இதில் உபபத்தி காண்பதரிது. விசிஷ்டஸ்ய அத்வைத மென்பதே

உபபந்நமாகும். 'ப்ரஹ்மமொன்றே ஸத்யமானது; மற்றவை யெல்லாம் மித்த்யை' என்று சொல்லுகிற அத்வைதிகள் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்விசிஷ்டத்வத்தை ஒப்புக்கொள்ளுவதில்லை. ப்ரஹ்மம் போலவே ஜகத்தும் ஸத்யமே யென்று அங்கீகரிக்கிற த்வைதிகளும் (மாத்வர்களும்) சேதநாசேதநங்களுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ரக்ஷ்யரக்ஷக பாவ ரூபமான ஸம்பந்தம் தவிர ஐக்யவ்யபதேசத்திற்குரிய ஸம்பந்த விசேஷமொன்றும் அங்கீகரிக்கின்றிலர். ஆகவே அவர்களும் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்வைசிஷ்ட்யத்தை ஏற்றுக்கொள்வதில்லை யென்பது தேறிற்று.

19. நமது ஸித்தாந்தத்திலோவென்னில், சேதநாசேதநாத்மக மான ப்ரபஞ்சத்தையும் ப்ரஹ்மத்தையும் ஸத்யமென்று கொள்வதோடு அவற்றுக்கு ஐக்யவ்யபதேசத்தை நிர்வஹிக்கக் கூடியதான சரீரசரீரி பாவ ரூபமான ஸம்பந்த விசேஷத்தையும் கொள்வதனாலே, உலகத்தில் உடலுக்கும் உயிருக்கும் வேற்றுமை அபலபிக்க முடியாததாயிருக்கச் செய்தேயும் ''சைத்ர: ஏக:'' என்கிற வியவஹாரம் எப்படிகாணப்படு கிறதோ அப்படியே இங்கும் சேதநாசேதந சரீரகமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வேந வ்யபதேசமும் பரஸ்பரம் ஸ்வரூப பேதமும் பொருந்தக் குறை யில்லை. இவ்வர்த்த தத்துவத்தைக் காட்ட வல்ல 'விசிஷ்டஸ்ய அத்வைதம்-விசிஷ்டாத்வைதம்' என்னும் வ்யுத்பத்தியே யுக்தமானதென்று கொள்க.

20. (த்வைதத்தையும் அத்வைதத்தையும் பற்றின நிரூபணங் கள்.) ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள் (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். ×க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக: என்பது முதலான ச்ருதி வாக்யங்கள் சேதந-அசேதந-ஈச்வர ரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. ×நேஹ நாநாஸ்தி கிஞ்சந× ×ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம × ×தத் த்வமஸி× இத்யாதிகளான ச்ருதிவாக்யங்கள், பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக் கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சில

விடத்து பேத ப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேத ப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பரவிரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம்பெறத் தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்றுகொள்ளும் அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக்காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக்காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக்காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள்.

21. ×யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம், ய ஆத்மநி திஷ்டந்× இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவி முதல் ஆத்மாவரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியாயிருக்கிறனென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மணவாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்க்யார்த்தங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகையதோஷம் சிறிதும்தட்டப்பெறுததது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படுகின்றது.

22. கீழே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதி வாக்கியத்திலும் அமுக்க்யார்த்த கல்பநை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட ×யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோதலேசமுமின்றிக்கே பொருந்தச் செய்யவல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள்-என்கிற காரணத்திறைல் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப்பொருத்தமானது.

23. ×நேஹ நாநாஸ்தி கிஞ்சந× இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளினலேற்பட்ட அபேதத்தையும் ×க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:× இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்மின்; சேதநா சேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூப பேதம் உண்மையாதலால்× க்ஷரம் ப்ரதாந மித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லியிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகிறபடியால் ×ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம× இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லே. ×யஸ்யாத்மாசரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனே ஸர்வாந்தர்யாமி யென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பது நம் ஆசாரியர்களின் நிரூபணம்.

24. சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண்செலுத்தினல் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதநமாகிய சரீரம் வேறு; அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேதப்ரதிபத்தி சாஸ்த்ர ஸம்மதமேயாகும் பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேதப்ரதிபத்தியும் 'அவயவ ஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்கவேணும். ''தேவதத்த: க்ருச:, யஜ்ஞதத்த: ஸ்தூல:'' இத்யாதிவ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீர பரங்களே யென்று அறுதியிடப்படுகிறது. ''தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந்'' இத்யாதி வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல, வெவ்வேறுபட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனை சரீரி ஒருவன்' என்னுமபிஸந்தியாலத்தனே யன்றோ.

